इति पूषा (புஷ்ணுதி இதி பூஷா) என்ற ஸமாஸத்தால், ஜீவனை ப்ரஹ்மமாக பாஸிக்கச் செய்கிறவன்.

**गभस्तिमान्** (கபஸ்திமாந்) =1. கிரணங்களோடு கூடிய ஸூர்ய பகவான். 2. **गां दिशं व्याप्य आभास्ति प्रकाशयति इति गभस्तिः** (காம் திஶம் வ்யாப்ய ஆபாஸ்தி ப்ரகாஶயதி இதி கபஸ்தி:) என்ற ஸமாஸத்தால் **गभस्ति** (கபஸ்தி) என்ற பதத்தால் ஸர்வலோக வ்யாபினியான மஹாலக்ஷ்மீ என்று அறிக. **नित्ययोगे मतुप्** (நித்யயோகே மதுப்) என்ற சாஸ்த்ரத்தை அநுஸரித்து ஒரு நிமிஷங்கூட மஹாலக்ஷ்மியை விட்டுப் பிரியாத மஹாவிஷ்ணு என்று அர்த்தம். 3. **गभस्तिः** (கபஸ்தி:) என்றால் ஸர்வ ஜகத்திலும் வியாபித்திருக்கும் காந்தி என்று அர்த்தமாகிறது. அந்த காந்தியோடு கூடின ஸ்வயம்ப்ரகாச சிதேகரஸமான பரப்ரஹ்மமே **गभस्तिमान्** (கபஸ்திமாந்) என்ற சப்தத்தால் சொல்லப் பெறுகிறது.

**सुवर्णसदृशः** (ஸுவர்ணஸத்ருஶ:) =1. தங்கத்தைப் போலுள்ள காந்தியோடு ப்ராதக் காலத்தில் உதிக்கிற ஸூர்ய பகவான். 2. **हिरण्यश्मश्रुः हिरण्यकेशः** (ஹிரண்யஶ்மஶ்ரு: ஹிரண்யகேஶ:) என்ற ச்ருதியை அநுஸரித்து, தங்கம்போல் ஜ்வலிக்கிற திவ்ய மங்கள விக்ரஹத்தோடு பாஸிக்கிற பரமேச்வரன் என்று அர்த்தம். 3. **शोभनः वर्णः सुवर्णः** (ஶோபந: வர்ண: ஸுவர்ண:) என்றதனால் **सुवर्णः** (ஸுவர்ண:) என்ற சப்தத்தால் ப்ரணவம் சொல்லப்பெறுகிறது. அந்த பிரணவமூலமாக எந்த பரப்ரஹ்மத்தினுடைய ஸந்தர்சனம் ஸித்திக்குமோ அந்தப் பரப்ரஹ்மமே **सुवर्णसदृशः** (ஸுவர்ணஸத்ருஶ:) என்ற பதத்தால் சொல்லப்பெறுகிறது.

**भानुः** (பாநு:)=1. பிரகாசிக்கிற ஸூர்யன். 2. ஸூர்யன் முதலான தேஜஸ்ஸுக்களைக்கூட பாஸிக்கச் செய்கிற பரமாத்மா. 3. பிரகாசத்தையே ஸ்வரூபமாக உடைய பரப்ரஹ்மம்.

**हिरण्यरेता:** (ஹிரண்யரேதா:)=1. ஹிரண்யத்தைப் போல் (தங்கம் போல்) ஜ்வலிக்கிற வீர்யத்தோடு கூடிய ஸூர்ய பகவான். 2. ஹிரண்யம்—தங்கத்துக்கு உத்பத்தி காரணமாக எவனுடைய ரேதஸ் ஆகிறதோ அந்த ஸகுண ப்ரஹ்மமே ஹிரண்யரேதா: என்ற சப்தத்தால் சொல்லப்பெறுகிறது. 3. ஹிரண்மய புருஷனை ஸகுணப்ரஹ்மமும் எவனுடைய ரேதஸ்ஸோ, அதாவது ஸகுணப்ரஹ்மத்துக்கும் எவன் அதிஷ்டானமோ அந்தச் சுத்தமான பரமாத்மா என்று அர்த்தம்.

**दिवाकर:** (திவாகர:)=1. பகலுக்கு அதிபதியான ஸூர்யன். 2. பிரகாசத்துக்குக் காரணமான பகவான். 3. அஜ்ஞானத்தை நிவிருத்தி செய்யக்கூடிய ஜ்ஞான ப்ரகாசத்தைக் கொடுக்கிற பரப்ரஹ்மம்.

இந்த ச்லோகத்தில் பத்து நாமாக்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றின் நான்காம் வேற்றுமை உருவங்களை அடியிற்கண்டபடி அறிக—

| | | |
|---|---|---|
| 1. | **आदित्याय नमः** | ஆதித்யாய நம: |
| 2. | **सवित्रे नमः** | ஸவித்ரே நம: |
| 3. | **सूर्याय नमः** | ஸூர்யாய நம: |
| 4. | **खगाय नमः** | ககாய நம: |
| 5. | **पूष्णे नमः** | பூஷ்ணே நம: |
| 6. | **गभस्तिमते नमः** | கபஸ்திமதே நம: |
| 7. | **सुवर्णसदृशाय नमः** | ஸுவர்ணஸத்ருஶாய நம: |
| 8. | **भानवे नमः** | பாநவே நம: |
| 9. | **हिरण्यरेतसे नमः** | ஹிரண்யரேதஸே நம: |
| 10. | **दिवाकराय नमः** | திவாகராய நம: |

हरिदश्वः सहस्रार्चिः सप्तसप्तिर्मरीचिमान् ।
तिमिरोन्मथनः शम्भुः त्वष्टा मार्ताण्ड अंशुमान् ॥

**ஹரிதச்வ: ஸஹஸ்ரார்ச்சி:**
**ஸப்தஸப்திர் மரீசிமாந் |**
**திமிரோந்மதந: சம்பு:**
**த்வஷ்டா மார்த்தாண்ட அம்சுமாந் ‖ 11**

**हरिदश्वः** (*ஹரிதச்வ:*)=1. **हरितः श्यामाः अश्वाः अस्य सन्तीति हरिदश्वः** (*ஹரித: ச்யாமா: அச்வா: அஸ்ய ஸந்தீதி ஹரிதச்வ:*) என்ற ஸமாஸத்தால் பச்சை நிறமுள்ள குதிரைகளோடு கூடிய ரதத்தில் ஸஞ்சரிக்கிறவன் இந்த ஸூர்யன். 2. **हरति मन इति हरित्** (*ஹரதி மந இதி ஹரித்*) **मनोहरः अश्वः वाहनं गरुडः यस्य सः** (*மநோஹர: அச்வ: வாஹநம் கருட: யஸ்ய ஸ:*) என்ற ஸமாஸத்தால் ஸகல ப்ராணிகளுடைய மனத்தைக் கவரச்செய்யும் கருடபகவானை வாஹனமாக உடைய ஸ்ரீமஹாவிஷ்ணு என்ற அர்த்தம் வெளியாகிறது. 3. **हरितः दिशः अश्नाति व्याप्नोतीति हरिदश्वः** (*ஹரித: திச: அச்நாதி வ்யாப்நோதீதி ஹரிதச்வ:*) என்ற ஸமாஸத்தால் எல்லாத் திக்குகளிலும் வ்யாபித்திருக்கிற பரப்ரஹ்மம் என்ற அர்த்தமும் வெளியாகிறது.

**सहस्रार्चिः** (*ஸஹஸ்ரார்ச்சி:*)=1. ஆயிரக்கணக்கான கிரணங்களோடு கூடின ஸூர்யன். 2. **अर्च्यत इति अर्चिः** (*அர்ச்யத இதி அர்ச்சி:*) என்ற ஸமாஸத்தால், அர்ச்சிஸ்சப்தத்தால் பூஜ்யமான மங்கள குணங்கள் சொல்லப்பெறுகின்றன. அந்தக் குணங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; ஆயிரக்கணக்கான கல்யாண குணங்களோடு கூடின ஸ்ரீமந்நாராயணன் என்ற

அர்த்தம் வெளியாகிறது. 3. सहस्राणि अनन्तानि अर्चींषि ज्ञानानि यस्य सः (ஸஹஸ்ராணி அநந்தாநி அர்ச்சீம்ஷி ஜ்ஞாநாநி யஸ்ய ஸ:) என்ற ஸமாஸத்தால், அநேக இந்த்ரியங்கள் மூலமாக வெகு பிரகாரமான ஞானங்களோடு கூடின ப்ரமாதா என்ற அந்தராத்மாவான நிர்குண ப்ரஹ்மம் சொல்லப்பெறுகிறது.

सप्तसप्तिः (ஸப்தஸப்தி:)=1. सप्त नामा सप्तिः अश्वः यस्य सः सप्तसप्तिः (ஸப்த நாமா ஸப்தி: அஶ்வ: யஸ்ய ஸ: ஸப்தஸப்தி:) என்ற ஸமாஸத்தாலும், एको अश्वो वहति सप्तनामा (ஏகோ அஶ்வோ வஹதி ஸப்தநாமா) என்ற ஶ்ருதியாலும், ஸப்த என்ற பெயரோடு கூடின ஒரே குதிரை மட்டும் பூட்டிய ரதத்தில் ஸஞ்சரிக்கிறவன். 2. அதே ஸமாஸத்தாலும், ஶ்ருதியாலுமே ஸப்த என்ற ஒற்றைக் குதிரையின் மேல் ஸஞ்சரிக்கிற கல்கி அவதாரம் செய்த ஸ்ரீமந்நாராயணன் என்று அர்த்தம். 3. सप्त शीर्षण्यः प्राणाः इन्द्रियाणि द्वे चक्षुषी द्वे श्रोत्रे द्वे च नासिके वाक् च एकेति (ஸப்த சீர்ஷண்ய: ப்ராணா: இந்த்ரியாணி த்வே சக்ஷுஷீ த்வே ஶ்ரோத்ரே த்வே ச நாஸிகே வாக் ச ஏகேதி) என்ற ஶ்ருதியை அநுஸரித்து, சீர்ஷ ஸ்தானத்திலுள்ள ஏழு விதமான ப்ராணன்களுக்கும் सप्तिः प्रवृत्तिः यतः सः सप्तसप्तिः (ஸப்தி: ப்ரவ்ருத்தி: யத: ஸ: ஸப்தஸப்தி:) என்ற ஸமாஸத்தால், ஏழு விதமான ப்ராணன்களாகிய இந்த்ரியங்களுக்கும் நியந்தாவாகிய அந்தராத்மா என்று அர்த்தம்.

मरीचिमान् (மரீசிமாந்)=1. பிரகாசத்தோடு கூடினவன். 2. म्रियन्ते शत्रवः अनेनेति मरीचिः सुदर्शनचक्रम् (ம்ரியந்தே ஶத்ரவ: அநேநேதி மரீசி: ஸுதர்ஶநசக்ரம்)

என்ற ஸமாஸத்தால், மரீசி என்ற சப்தத்துக்கு, சத்ருக்களை நாசம் செய்கிற சக்ராயுதம் என்று அர்த்தம். அத்துடன் கூடிய ஸ்ரீமஹா விஷ்ணுவுக்கு **मरीचिमान्** (மரீசிமாந்) என்று பெயர். அதாவது சக்ரபாணியான ஸ்ரீமஹாவிஷ்ணு சொல்லப்பெறுகிறார். 3. ஞானரச்மியோடு கூடின அந்தராத்மாவும் மரீசிமாந் என்ற பதத்தால் சொல்லப்பெறுகிறார்.

**तिमिरोन्मथनः** (திமிரோந்மதந:) = 1. **तिमिराणि उन्मथ्नातीति तिमिरोन्मथनः** (திமிராணி உந்மத்நாதீதி திமிரோந்மதந:) என்ற ஸமாஸத்தால் இருட்டைப் போக்கடிக்கிற ஸூர்யன். 2. **हृद्यन्तःस्थो ह्यभद्राणि मिथुनोति सुहृत् सताम्** (ஹ்ருத்யந்தஸ்தோ ஹ்யபத்ராணி மிதுநோதி ஸுஹ்ருத் ஸதாம்) என்ற ஸ்ம்ருதியை அநுஸரித்து, ஞானத்தினுடைய உத்பத்தியைத் தடுக்கிற பாவங்களும், ராக த்வேஷாதி தோஷங்களும் திமிர பதத்தின் அர்த்தமாக ஆகின்றன. ஸ்ரீமந் நாராயணன் ஸாதுக்களுடைய ஹ்ருதயத்தில் இருந்து கொண்டு ஸாதுக்களுக்கு ஸுஹ்ருத்தாக (ஸ்நேஹிதன்) ஆகி, அந்தத் தோஷங்களையும் நாசம் செய்து வைப்பதனால், திமிரோந்மதந: என்று மஹாவிஷ்ணுவுக்கும் பெயர் உண்டு. 3. **तिमिरं** (திமிரம்) என்றால் அஜ்ஞானம். அதை நாசம் செய்கிற அந்தராத்மாவும் திமிரோந்மதந சப்தத்தின் அர்த்தமாக ஆகலாம்.

**शंभुः** (சம்பு:)=1. பிராணிகளுடைய ஸுகத்துக்குக் காரணமாகிற ஸூர்யன். 2. சமதமாதி ஞான ஸாதனங்களைப் பிராணிகளுக்குக் கொடுத்து அவர்களை அநுக்கிரகம் செய்கிற மஹாவிஷ்ணு.

3. மோக்ஷத்தைக் கொடுக்கும் அந்தராத்மாவான நிர்குண ப்ரஹ்மம்.

त्वष्टा (த்வஷ்டா)=1. त्वक्षति जलं तनुं करोति (த்வக்ஷதி ஜலம் தநும் கரோதி) என்ற ஸமாஸத்தால், ஜலத்தைத் தன் கிரணங்களால் சுண்டச் செய்கிற ஸூர்ய பகவான். त्वक्ष्णोति त्रिःसप्तकृत्वः सक्षत्रियां भूमिम् (த்வக்ஷ்ணோதி த்ரி:ஸப்தக்ருத்வ: ஸக்ஷத்ரியாம் பூமிம்) என்ற ஸமாஸத்தால் இருபத்தொரு தடவை பூமண்டலத்தைப் பிரதக்ஷிணம் செய்து, க்ஷத்திரிய ஜாதியை வேருடன் இல்லாமல் அறுத்த பரசுராமாவதார மூர்த்தியான ஸ்ரீமந்நாராயணன். 3. त्वक्षति तनुं करोति भक्तानां जन्म-मरणरूप-अनर्थप्रवाहदुःखम् (த்வக்ஷதி தநும் கரோதி பக்தாநாம் ஜந்ம-மரணரூப-அநர்த்த-ப்ரவாஹது:கம்) என்ற சாஸ்த்ரத்தால், முமுக்ஷுக்களுக்கு ஏற்பட்ட ஸம்ஸார பந்தத்தை அடியோடு நாசம் செய்கிற அந்தராத்மா என்பது வெளியாகிறது.

मार्ताण्डः (மார்த்தாண்ட:)=1. मृतो अण्डे जातः मार्ताण्डः (ம்ருதோ அண்டே ஜாத: மார்த்தாண்ட:) என்ற பதத்தினால், ஸகல ஜகத்தும் பிரளயத்தை அடைந்தபிறகு மறுபடி ஸ்ருஷ்டிக்கு உபயோகமாக முதல் முதலில் மறுபடியும் உண்டுபண்ணப்பட்ட ஸூர்ய பகவான் மார்த்தாண்ட பதத்தால் சொல்லப்பெறுகிறுன். 2. அசேதனமான அண்டத்தை (பிரபஞ்சத்தை) तदनुप्रविश्य (ததநுப்ரவிஶ்ய) என்ற ஶ்ருதியால் அந்த அண்டத்துக்குள் அநுப்ரவேஶம் செய்து அதை உஜ்ஜீவிக்கச் செய்கிற ஸகுண ப்ரஹ்மமாகும். 3. ம்ருதப்ராயமான கார்யகாரண ஸங்காதத்துக்குச்

சேதயிதாவாக (உயிரைக் கொடுக்கும்) இருப்பதனுல், அந்தராத்மாவான பரப்ரஹ்மமும் மார்த்தாண்ட: என்ற பதத்தால் சொல்லப்பெறும்.

अंशुमान् (அம்ஶுமாந்) = 1. கிரணங்களையே மலையாக உடையவன். 2. अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणः स्थितः (அந்தர் பஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:) என்ற ஶ்ருதியை அநுஸரித்தும், अशू व्याप्तौ (அஶூ வ்யாப்தௌ) என்ற தாதுவினுலும், ஸர்வ வ்யாபகமான மஹாவிஷ்ணு அம்ஶுமாந் என்ற பதத்தால் சொல்லப்பெறுகிருர். ममैवांशो जीवलोके (மமைவாம்ஶோ ஜீவலோகே) என்ற ஸ்ம்ருதியை அநுஸரித்து, அநேக ஜீவனை அம்சமாக உடைய அம்சியான அந்தராத்மா அம்ஶுமாந் என்ற பதத்தால் சொல்லப்பெறுகிருர்.

இந்த ச்லோகத்தில் ஒன்பது பதங்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றின் நான்காம் வேற்றுமை உருவங்களை அடியிற் கண்டபடி அறிக—

| | | |
|---|---|---|
| 1. | हरिदश्वाय नमः | ஹரிதஶ்வாய நம: |
| 2. | सहस्रार्चिषे नमः | ஸஹஸ்ரார்ச்சிஷே நம: |
| 3. | सप्तसप्तये नमः | ஸப்தஸப்தயே நம: |
| 4. | मरीचिमते नमः | மரீசிமதே நம: |
| 5. | तिमिरोन्मथनाय नमः | திமிரோந்மதநாய நம: |
| 6. | शम्भवे नमः | ஶம்பவே நம: |
| 7. | त्वष्ट्रे नमः | த்வஷ்ட்ரே நம: |
| 8. | मार्ताण्डाय नमः | மார்த்தாண்டாய நம: |
| 9. | अंशुमते नमः | அம்ஶுமதே நம: |

हिरण्यगर्भः शिशिरः तपनो भास्करो रविः ।
अग्निगर्भोऽदितेः पुत्रः शंखः शिशिरनाशनः ॥ १२ ॥

**ஹிரண்யகர்ப: சிசிர:, தபநோ ப்ాஸ்கரோ ரவி: |**
**அக்நிகர்போதிதே: புத்ர: ஶங்க: சிசிரநாஶந: || 12**

हिरण्यगर्भः (*ஹிரண்யகர்ப:*)=1. हिरण्यस्य ब्रह्माण्डस्य गर्भः हिरण्यगर्भः (*ஹிரண்யஸ்ய ப்ரஹ்மாண்டஸ்ய கர்ப: ஹிரண்யகர்ப:*) என்ற ஸமாஸத்தால், பிரம்மாண்டத்தினுடைய நடுப்பாகத்தில் பாஸிக்கிற ஸூர்ய பகவான் தான் ஹிரண்யகர்பன் என்று சொல்லப்பெறுகிறார். 2. हिरण्यं हितरमणीयं गर्भं अन्तःकरणं यस्य सः (*ஹிரண்யம் ஹிதரமணீயம் கர்பம் அந்த:-கரணம் யஸ்ய ஸ:*) என்ற ஸமாஸத்தால், எந்த பரமாத்மாவினுடைய ஸாக்ஷாத்காரத்தில் அந்தக்கரணத்தை ஸாதனமாயும் ஹிதமாயும் ரமணீயமாயும் मनसैव अनुद्रष्टव्यं (*மநஸைவ அநுத்ரஷ்டவ்யம்*) என்ற ஶ்ருதியினால் சொல்லப் பெறுகிறதோ, அந்த ஸகுண ப்ரஹ்மம் ஹிரண்யகர்பன் என்ற பதத்தால் சொல்லப்பெறுகிறது. 3. ஸகல ஜகத்தினுடைய உத்பத்தி ஸ்திதி லயம் மூன்றுக்கும் கர்த்தாவான ப்ரம்மா விஷ்ணு ருத்திரன் இந்த மூன்று தேவதைகளும் ஒன்றாகச்சேர்ந்த தத்துவம் ஹிரண்யகர்பபத வாச்யமாக ஆகிறது. ஆகவே ஆத்ம தத்துவமாகத்தான் ஆகும். அதனால் ஹிரண்யகர்பன் என்ற பதம் அந்தராத்மாவையும் குறித்துச் சொல்கிறது.

शिशिरः (*சிசிர:*)=1. மழைமூலமாக லோகத்துக்குக் குளிர்ச்சியைக் கொடுக்கிறவன். याभिरादित्यस्तपति रश्मिभिः ताभिः पर्जन्यो वर्षति (*யாபிராதித்யஸ் தபதி*

ரஶ்மிபி: தாபி: பர்ஜந்யோ வர்ஷதி) என்ற ஶ்ருதியி ஞல், ஸூர்யனே சிசிரன் என்று சொல்லப்பெறு கிருன். 2. ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதி பௌதிகம் என்ற மூன்று விதமான தாபங்களால் தபிக்கும் பிராணிகளுக்குத் தாபத்தை நிவிருத்தி செய்து வைக்கும் ஓர் அபூர்வமான குளிர்ச்சியைக் கொடுக்கும் ஸகுண ப்ரஹ்மமும் சிசிர: என்ற பதத் தால் சொல்லப்பெறும். 3. शिशिरः शीतः सुखस्वभावः (சிசிர: சீத: ஸுகஸ்வபாவ:) என்ற வாக்கியத்திஞல், ஆனந்தத்தையே ஸ்வபாவமாக உடைய பரப்ரஹ்மம்.

तपनः (தபந:)=1. தன்னை ஆச்ரயித்த பக்தர் களுக்கு விரோதிகள் எவர்களோ அவர்களைத் தபிக்கச் செய்கிறவன் என்றதஞல் ஸூர்யனைத் தபந: என்ற பதத்தால் சொல்லியிருக்கிறது. 2. तप ऐश्वर्ये (தப ஐஶ்வர்யே) என்ற தாதுவிஞல், நிரவதிகமான ஸகல ஐஶ்வர்ய ஸம்பந்நஞன பகவான் (அதாவது ஸகுண ப்ரஹ்மம்) தபந சப்தவாச்யமாக ஆகும். 3. तप आलोचने (தப ஆலோசநே) என்ற தாதுவிஞல், ஞானத்தையே ஸ்வரூபமாக உடைய பரப்ரஹ்மம் தபந: என்ற பதத்தால் சொல்லப்பெறும்.

भास्करः (பாஸ்கர:)=1. பிரகாசிக்கிறவன். 2. ஸகல வஸ்துக்களையும் மனிதன் பிரத்தியக்ஷமாகப் பார்ப்ப தற்குக் காரணபூதஞன பரமாத்மா. 3. भा (பா) என்ற சப்தத்திஞல் சொல்லப்பெறுகிற வித்தையை ஜிஜ்ஞாஸுக்களுக்குக் கொடுத்து அநுக்கிரகம் செய் கிறவன்.

रविः (ரவி:)=1. रूयते स्तूयते सर्वैः इति रविः (ரூயதே ஸ்தூயதே ஸர்வை: இதி ரவி:) என்ற ஸமா

ஸத்தால், ஸகலமான பிராணிகளாலும் நமஸ்கரிக்கப் பெறுகிற ஸூர்யனுக ஆகிருன். 2. रौति उपदिशति वेदान् इति वा रविः (ரௌதி உபதிஶதி வேதாந் இதி வா ரவி:) என்ற ஸமாஸத்தால், ப்ரம்மாவுக்கு வேதத்தை உபதேசம் செய்த மஹாவிஷ்ணு ரவி என்றபதத்தால் சொல்லப்பெறுகிருர். 3. रूयते स्तूयते वेदैः इति रविः (ரூயதே ஸ்தூயதே வேதை: இதி ரவி:) என்ற ஸமாஸத்தால், வேதாந்த வேத்யனுன பரப்ரஹ்மமாகும்.

अग्निगर्भः (அக்நிகர்ப:)=1. दिवा अग्निः गर्भे यस्य सः (திவா அக்நி: கர்பே யஸ்ய ஸ:) என்ற ஸமாஸத்தாலும், उद्यन्तं वा आदित्यं अग्निः अनुसमारोहति (உத்யந்தம் வா ஆதித்யம் அக்நி: அநுஸமாரோஹதி) என்ற ஶ்ருதியாலும், பகலில் அக்கினியைத் தனக்குள் அடக்கி வைத்துக் கொண்டிருப்பதனுல், ஸூர்ய பகவான் அக்நிகர்ப: என்ற பதத்தால் சொல்லப்பெறுகிருன். 2. अग्निः कालाग्निरुद्रः गर्भे यस्य सः अग्निगर्भः (அக்நி: காலாக்நிருத்ர: கர்பே யஸ்ய ஸ: அக்நிகர்ப:) என்ற ஸமாஸத்தாலும், नारायणात् रुद्रो अजायत (நாராயணுத் ருத்ரோ அஜாயத) என்ற ஶ்ருதியாலும், காலாக்னி ருத்ரனைத் தனக்குள் கர்ப்பத்தில் வைத்துக்கொண்டிருப்பதனுல், ஸ்ரீமந் நாராயணனே அக்நிகர்பன் என்றபதத்தால் சொல்லப்பெறுகிருன். 3. अग्निः (அக்நி:) என்ற பதம் மற்ற நான்கு பூதங்களுக்கும் உபலக்ஷணமாகும். அதனுல் பஞ்சபூதங்களின் விகாரமான ஸகல ஜகத்தும் எவனிடத்தில் கல்பிதமோ, அந்த நிர்குணமான பரமாத்மாவும் அக்நிகர்பன் என்ற பதத்தால் சொல்லப்பெறுகிருன்.

अदितेः पुत्रः (அதிதே: புத்ர:)=1. காச்யப ப்ரஜா பதி (மஹர்ஷி)யினுடைய பத்தினியான அதிதி அம்மாளிடம் புத்திரனுக ஜனித்ததனுல் ஸூர்யனும் அதிதே: புத்ர: என்ற பதத்தால் சொல்லப்பெறுகிருர். 2. அதிதி அம்மாளுடைய पुं (பும்) குமாரனுன இந்த்ரனை त्रायते (த்ராயதே) அஸுரர்களிடமிருந்து ரக்ஷித்த, உபேந்த்ராவதாரம் செய்த வாமன மூர்த்தியாகும். 3. दितिः नाशः न विद्यते यस्याः सा अदितिः तस्याः पुत्रः अदितेः पुत्रः (திதி: நாஶ: ந வித்யதே யஸ்யா: ஸா அதிதி: தஸ்யா: புத்ர: அதிதே: புத்ர:) என்ற ஸமாஸத்தால், அதிதி என்ற பதம் ப்ரஹ்மவித்யை என்று ஆகிறது. அந்த ப்ரஹ்மவித்யையால் அடையத் தகுந்த நிர்குண ப்ரஹ்மமே அதிதே: புத்ர: என்ற சப்தத்தால் சொல்லப்பெறுகிறது.

शंखः (ஶங்க:)=1. शमेः खः (ஶமே: க:) என்ற தாதுவினுல் ஸாயங்காலத்தில் ஸ்வயமாகவே சமனத்தை (அஸ்தமனத்தை) அடைகிற ஸூர்ய பகவான். 2. शं सुखं खे आकाशे यस्य सः शंखः (ஶம் ஸுகம் கே ஆகாஶே யஸ்ய ஸ: ஶங்க:) என்ற ஸமாஸத்தால், அந்தர்முகர்களுடைய ஹ்ருதயாகாசத்தால் நிரவதிகமான ஆனந்தத்தை அநுபவித்துக் கொண்டிருக்கும் ஸகுண ப்ரஹ்மமே ஆகும். 3. शं च खं च शंखः (ஶம் ச கம் ச ஶங்க:) என்ற ஸமாஸத்தால் ஶம் ஆன கம் அதாவது பரமானந்தமான ஆகாசம். ஆகாசம்போல் வியாபகமான ஸுகம். இதுவே எந்த ப்ரஹ்மத்துக்கு ஸ்வரூபமோ அந்த நிர்குண ப்ரஹ்மமே சங்க பதத்தின் பொருளாகும். यदेष आकाश आनन्दो

न स्यात् (யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத்) என்ற ஶ்ருதியே இதில் பிரமாணமாக ஆகும்.

शिशिरनाशनः (சிசிரநாஶந:) = 1. शिशिरं हिमं नाशयतीति शिशिरनाशनः (சிசிரம் ஹிமம் நாஶயதீதி சிசிரநாஶந:) என்ற ஸமாஸத்தால் பனியைப் போக்கடிக்கிற ஸூர்யன். 2. शिशिरं जाड्यं नाशयति अपहरतीति शिशिरनाशनः (சிசிரம் ஜாட்யம் நாஶயதி அபஹரதீதி சிசிரநாஶந:) என்ற ஸமாஸத்தால், புத்திமாந்த்யத்தைப் போக்கும் பரமேச்வரன் என்று அர்த்தம். 3. शिशिरं अविद्या कामकर्म नाशयतीति शिशिरनाशनः (சிசிரம் அவித்யா காமகர்ம நாஶயதீதி சிசிரநாஶந:) என்ற ஸமாஸத்தால் பந்தத்துக்கு ஹேதுவான பாசத்ரயங்களையும் நாசம் செய்து வைக்கும் நிர்குண ப்ரஹ்மம் என்று அர்த்தம்.

இந்த ச்லோகத்தில் ஒன்பது நாமாக்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றின் நான்காம் வேற்றுமை உருவங்களை அடியிற்கண்டபடி அறிக—

| | | |
|---|---|---|
| 1. | हिरण्यगर्भाय नमः | ஹிரண்யகர்பாய நம: |
| 2. | शिशिराय नमः | சிசிராய நம: |
| 3. | तपनाय नमः | தபநாய நம: |
| 4. | भास्कराय नमः | பாஸ்கராய நம: |
| 5. | रवये नमः | ரவயே நம: |
| 6. | अग्निगर्भाय नमः | அக்நிகர்பாய நம: |
| 7. | अदितेः पुत्राय नमः | அதிதே: புத்ராய நம: |
| 8. | शंखाय नमः | ஶங்காய நம: |
| 9. | शिशिरनाशनाय नमः | சிசிரநாஶநாய நம: |

व्योमनाथस्तमोभेदी ऋग्यजुःसामपारगः ।
घनवृष्टिरपांमित्रः विन्ध्यवीथीप्लवंगमः ॥ १३ ॥

**வ்யோமநாதஸ் தமோபேதீ ரிக்யஜுஃஸாமபாரக: |**
**கநவ்ருஷ்டிரபாம் மித்ர:, விந்த்யவீதிப்லவங்கம: ‖ 13**

व्योमनाथः (வ்யோமநாத;)=1. व्योम्नः नाथः व्योमनाथः (வ்யோம்ந: நாத: வ்யோமநாத:) ஆகாசமண்டலத்துக்கு அதிபதி ஸூர்ய பகவான். 2. **तस्माद्वा एतस्मात् आत्मनः आकाशः संभूतः** (தஸ்மாத் வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாச: ஸம்பூத:) என்ற ச்ருதியை அநுஸரித்து தாமஸ அஹங்கார மூலமாக ஆகாசத்தை ஸ்ருஷ்டித்த ஈச்வரன். 3. **व्योम्नि** (வ்யோம்நி) பரமாகாசம் என்ற ஹ்ருதயாகாசத்தில், **नाथृ याच्ञायां** (நாத்ரு யாச்ஞாயாம்) என்ற தாதுவை அநுஸரித்து, **नाथ्यते प्रार्थ्यते अन्तर्मुखैः** (நாத்யதே ப்ரார்த்யதே அந்தர்முகை:) என்ற ஸமாஸத்தால், ஹ்ருதய குஹையில் வித்வான்களால் அநுபவிக்கப்பெறும் பரப்ரஹ்மமே வ்யோமநாதன் என்று சொல்லப்பெறுகிறது.

**तमोभेदी** (தமோபேதீ) = 1. **तमः राहुं भेत्तुं शीलं अस्य अस्तीति तमोभेदी** (தம: ராஹூம் பேத்தும் சீலம் அஸ்ய அஸ்தீதி தமோபேதீ) என்ற ஸமாஸத்தால், ராஹுவுக்கு சத்ருவான ஸூர்யபகவான் என்று அர்த்தம். 2. **तमः** (தம:) பக்தர்களுடைய தமோ குணத்தைப் பேதிக்கிற (நாசம் செய்கிற) பரமேச்வரன். 3. ஜிஜ்ஞாஸுக்களுடைய ஆவரண சக்தியை நாசம் செய்கிற பரமாத்மா நிர்குண ப்ரஹ்மமே.

ऋग्यजुःसामपारगः (ரிக் யஜு: ஸாம பாரக: )= 1.ऋग्यजुःसाम्नां पारं गच्छतीति ऋग्यजुःसामापरगः (ரிக்யஜு:

ஸாம்நாம் பாரம் கச்சதீதி ரிக்யஜு:-ஸாமபாரக:) ऋग्भिः पूर्वाह्णे दिवि देव ईयते यजुर्वेदे तिष्ठति मध्ये अह्नः सामवेदेन अस्तमये महीयते। वेदैः अशून्यः त्रिभिरेति सूर्यः॥ (ரிக்பி: பூர்வாஹ்ணே திவி தேவ: ஈயதே யஜுர்வேதே திஷ்டதி மத்யே அஹ்ந: ஸாமவேதேந அஸ்தமயே மஹீயதே, வேதை: அஶூந்ய: த்ரிபிரேதி ஸூர்ய: ॥) என்ற ச்ருதியால், மூன்று வேதங்களும் மூன்று காலங்களிலும் ஸ்துதிக்கப்படுவதனால், ஸூர்ய பகவான் மூன்று வேதங்களுடைய கரையைக் கடந்தவனுகிறன். (2) सकलवेदपर्यवसानभूमिः (ஸகல வேத பர்யவஸாந பூமி:) அதாவது எல்லா வேதங்களுக்கும் முடிவு ஏற்படுகிற ஸ்தானமான பரமாத்மா. वेदैश्च सर्वैः अहमेव वेद्यः॥ ये च वेदविदो विप्राः ये चाध्यात्मविदो जनाः। ते वदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनम्॥ (வேதைஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்ய: ॥ யே ச வேதவிதோ விப்ரா: யே ச அத்யாத்மவிதோ ஜநா:। தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் ॥) என்ற வசனமூலம் பகவானுன ஸகுண ப்ரஹ்மமே ஸகல வேதங்களுக்கும் முடிவு ஏற்படுகிற ஸ்தானம் என்று தெரிகிறது. 3. ऋग्यजुःसाम्नां पारं गमयतीति ऋग्यजुःसामपारगः (ரிக்யஜு:ஸாம்நாம் பாரம் கமயதீதி ரிக்யஜு:ஸாமபாரக:) என்ற ஸமாஸத்தாலும், यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै। तं ह देवं आत्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्ह वै शरणं अहं प्रपद्ये॥ (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம், யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை। தம் ஹ தேவம் ஆத்மபுத்தி ப்ரகாஶம் முமுக்ஷுர் ஹ வை ஶரணம் அஹம் ப்ரபத்யே) என்ற ச்ருதியாலும் ஸகுண ப்ரஹ்

மத்துக்குங்கூட மூன்று வேதங்களின் கரையைக் காட்டின நிர்குண ப்ரஹ்மமேயாகும்.

**घनवृष्टिः** (கநவ்ருஷ்டி:) = 1. மிகவும் கனமான மழையை உண்டுபண்ணுகிறவன். அதுவும் இந்த ஸூர்ய பகவான். **अग्नौ प्रास्ताहुतिः सम्यक् आदित्यं उपतिष्ठते। आदित्याज्जायते वृष्टिः वृष्टेरन्नं ततः प्रजाः॥** (அக்நௌ ப்ராஸ்தாஹுதி: ஸம்யக் ஆதித்யம் உபதிஷ்டதே। ஆதித்யாஜ் ஜாயதே வ்ருஷ்டி: வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா:॥) என்ற ச்ருதியே இதில் ப்ரமாணமாகும். 2. **घना वृष्टिः सकलकर्मफलरूपा यस्मात् सः घनवृष्टिः** (கநா வ்ருஷ்டி: ஸகலகர்மபலரூபா யஸ்மாத் ஸ: கநவ்ருஷ்டி:) என்ற ஸமாஸத்தால், கர்மபலத்தை வர்ஷிக்கும் ஸகுண ப்ரஹ்மம் சொல்லப்பெறும். அதிலும், **अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च** (அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச) என்ற ஸ்ம்ருதியும், **फलं अतः उपपत्तेः** (பலம் அத: உபபத்தே:) என்ற ந்யாயமும் ப்ரமாணமாகும். 3. **घना वृष्टिः कृपारूपा यस्य सः घनवृष्टिः** (கநா வ்ருஷ்டி: க்ருபாரூபா யஸ்ய ஸ: கநவ்ருஷ்டி:) என்ற ஸமாஸத்தால், கருணையினாலேயே போகாநந்தத்தை ஜீவனுக்கு வர்ஷிக்கும் பரப்ரஹ்மமே ஆகும்.

**अपांमित्रः** (அபாம் மித்ர:)=1. ஸூர்யன் மழைக்குக் காரணமானதனால் ஜலத்துக்கு மித்திரனாகிறான். 2. பெரிய கடலில் ஆதிசேஷ சயனத்தில் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீமஹாவிஷ்ணு. **यमन्तः समुद्रे कवयो वदन्ति** (யமந்த: ஸமுத்ரே கவயோ வதந்தி) என்ற ச்ருதியே அதில் ப்ரமாணமாகும். 3. **अपां सात्त्विकानां मित्रः चैतन्यदानेन उपकर्ता** (அபாம் ஸாத்த்விகாநாம்

மித்ர: சைதந்யதாநேந உபகர்த்தா) என்ற ஸமாஸத்தால், ஸஜ்ஜனங்களுக்குத் தன் ஸ்வருபத்தைப் பிரத்தியக்ஷமாகத் தரிசனம் கொடுக்கிற பரப்ரஹ்மமே ஆகும்.

विन्ध्यवीथीप्लवंगमः (விந்த்யவீதிப்லவங்கம:) = 1. தக்ஷிணாயனத்தில் விந்த்ய பர்வதத்தினுடைய வீதியில் (மார்க்கத்தில்) தெற்குப் பாகமாக வேகமாக ஸஞ்சாரம் செய்யும் ஸூர்ய பகவான் விந்த்யவீதிப்லவங்கம: என்று சொல்லப்பெறுகிறான். 2. விந்த்ய பர்வதம் போல் மிகவும் துர்க்கமமான உபநிஷத்துக்களாகிற வீதிகளில் ஸஞ்சரிக்கிற வேததாத்பர்ய விஷயீபூதமான பரமாத்மா. 3. விந்த்ய பர்வதத்தைப் போல் மிகவும் கஹனமானதும் (கண்டுபிடிக்க முடியாததும்), அதனாலேயே போக முடியாததாயுமுள்ள ஸுஷும்ன நாடி என்ற மோக்ஷ நாடியில் வெகு வேகமாக ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ள ஸாக்ஷாத் நிர்குண ப்ரஹ்மமே விந்த்யவீதிப்லவங்கம: என்ற சப்தத்தால் சொல்லப்பெறுகிறது.

இந்த ச்லோகத்தில் ஆறு நாமாக்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றின் நான்காம் வேற்றுமை உருவங்களை அடியிற்கண்டபடி அறிக.

1. व्योमनाथाय नमः — வ்யோமநாதாய நம:
2. तमोभेदिने नमः — தமோபேதிநே நம:
3. ऋग्यजुःसामपारगाय नमः — ரிக்யஜு:ஸாமபாரகாய நம:
4. घनवृष्टये नमः — கநவ்ருஷ்டயே நம:
5. अपांमित्राय नमः — அபாம்மித்ராய நம:
6. विन्ध्यवीथीप्लवंगमाय नमः — விந்த்யவீதிப்லவங்கமாய நம:

आतपी मण्डली मृत्युः पिंगलस्सर्वतापनः ।
कविर्विश्वो महातेजाः, रक्तः सर्वभवोद्भवः ॥ १४ ॥

**ஆதபீ மண்டலீ ம்ருத்யு:**
**பிங்கள: ஸர்வதாபந: |**
**கவிர் விஶ்வோ மஹாதேஜா:,**
**ரக்த: ஸர்வபவோத்பவ: ‖ 14**

आतपी (ஆதபீ) = 1. आतपः अस्य अस्तीति आतपी (ஆதப: அஸ்ய அஸ்தீதி ஆதபீ) என்ற ஸமாஸத்தினால், கிரண ஸமூஹங்களோடு கூடினவன். 2. आ समन्तात् तपः जगन्निर्माणसंकल्पः अस्यास्तीति आतपी (ஆ ஸமந்தாத் தப: ஜகந்நிர்மாணஸங்கல்ப: அஸ்யாஸ்தீதி ஆதபீ) என்ற ஸமாஸத்தினாலும், तप आलोचने (தப ஆலோசநே) என்ற தாதுவினாலும், यस्य ज्ञानमयं तपः (யஸ்ய ஜ்ஞாநமயம் தப:) என்ற ச்ருதியினாலும். ஜகத்தை இச்சா மாத்திரத்தினால் நிர்மாணம் பண்ணுகிற ஸத்ய ஸங்கல்பத்தோடு கூடிய பகவானான ஆதி நாராயணனும் ஆதபீ என்ற சப்தத்தின் பொருளாக ஆகிறான். 3. तपांसि सर्वाणि च यद्वदन्ति (தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி) என்ற ச்ருதியினால், आ समन्तात् (ஆஸமந்தாத்) நாலு பக்கத்திலும் तपः (தப:) மஹர்ஷிகளுடைய உக்கிரமான தவம் எந்தப் பரப்ரஹ்மத்தினுடைய ஸாக்ஷாத்காரத்துக்காக ஏற்பட்டதோ அந்தப் பரப்ரஹ்மமும் ஆதபீ என்ற பதத்தினால் சொல்லப்பெறும்.

मण्डली (மண்டலீ) = 1. மண்டலமாக (வளைவான) உருவமுடைய பிம்பத்தோடு கூடிய ஸூர்யன் மண்டலீ என்று சொல்லப் பெறுவான். 2. मडि भूषायां

(மடி பூஷாயாம்) என்ற தாதுவினால், मण्ड्यते अनेन (மண்ட்யதே அநேந) என்ற ஸமாஸத்தை அநுஸரித்து, ஸ்ரீமஹா விஷ்ணுவுக்கு அலங்காரமான கௌஸ்துப மணி மண்டலம் என்ற சப்தத்தினால் சொல்லப்பெறும். அதனால் அலங்கரிக்கப்பெற்ற ஸ்ரீமஹாவிஷ்ணுவும் மண்டலீ என்ற பதத்தினால் சொல்லப்பெறுகிறார். 3. मण्ड्यते अनेन (மண்ட்யதே அநேந) என்ற ஸமாஸத்தினாலும், एष ह्येव आनन्दयाति (ஏஷ ஹ்யேவ ஆநந்தயதி) என்ற ச்ருதியினாலும், ஸர்வ ஜகத்திலும் பிராணிகளாலும் பார்க்கப்பெறுகிற ஆனந்தம் மண்டலம் என்ற பதத்தினால் சொல்லப் பெறுகிறது. அந்த ஆனந்தத்தை, ராகுவினுடைய சிரஸ் என்பதுபோல் ஸ்வரூபமாக உடைய நிர்குண பரப்ரஹ்மமும் மண்டலீ என்ற பதத்தினால் சொல்லப் பெறுகிறது.

मृत्युः (ம்ருத்யு:) = 1. உபாஸகர்களுடைய விரோதிகளை நாசம் செய்வதில் ஸூர்ய பகவான் ம்ருத்யு போல் விளங்குகிறான். அதனால் ம்ருத்யு என்றபதத்தினால் சொல்லப்பெறுகிறான். 2. यस्य मृत्युः शरीरं (யஸ்ய ம்ருத்யு: ஶரீரம்) என்ற ச்ருதியினால் ம்ருத்யுவையும் சரீரமாக உடைய மகாவிஷ்ணுவும் (அதாவது ம்ருத்யுவுக்கு நியந்தாவான ஸ்ரீமந் நாராயணன்) ம்ருத்யு என்ற பதத்தினால் சொல்லப்பெறுகிறார். 3. यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनौ मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः (யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதநௌ ம்ருத்யு: யஸ்ய உபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ:) என்ற ச்ருதியினாலும், अत्ता चराचरग्रहणात् (அத்தா சாரசரக்ரஹணாத்) என்ற ந்யாயத்தினாலும், अमुं आहुः

**परं मृत्युं** (அமும் ஆஹு: பரம் ம்ருத்யும்) என்ற வாக்கி யத்தினுலும், ஸகல ஜகத்துக்கும் ஸம்ஹர்த்தாவான, அதாவது தன் ஸாக்ஷாத்கார மூலமாக மூல அஜ்ஞா நத்துக்கு லயத்தை உண்டுபண்ணி அந்த அஜ்ஞாநத்தி ஞல் கல்பிக்கப்பெற்ற ஜகத்தையே இல்லாமற் செய்து, ஜீவனை முக்தனுகச் செய்வதனுல், நிர்குண பரப்ரஹ்மம் ம்ருத்யு சப்தத்தினுல் சொல்லப் பெறுகிறது.

**पिंगलः** (பிங்கல:) = 1. [உதயமாகிற] ஸமயத்தில் மஞ்சள் வர்ணமாக ஸூர்யன் இருப்பதனுல் அதை அநுஸரித்து ஸூர்யனுக்குப் பிங்களன் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. 2. **पिंग मेलने** (பிங்க மேலநே) என்ற தாதுவினுலும், **पिंगति मिलतीति पिंगलः** (பிங்கதி மிலதீதிபிங்கல:) என்ற ஸமாஸத்தினுலும், தான் மஹாத்மாவாக இருந்தாலும் தன் மஹாத்மத்வம் என்ற பெருமையைக் கவனிக்காமல் தீன ஜனங் களிடத்தில் அபாரமான கருணையை வைத்து அவர் களைத் தன் அருகிலிருந்து பிரித்துவிடாமல் சேர்த்து வைத்துக்கொண்டு ரக்ஷிக்கும் ஸ்வபாவமுள்ள கருணு மூர்த்தியான மஹாவிஷ்ணுவே பிங்களன் என்ற சப்தத்தால் சொல்லப்பெறுகிருர். இதே விஷயம் தான் ஸ்ரீமத் பாகவதத்திலும் **निष्किञ्चनजनप्रियः** (நிஷ்கிஞ்சநஜநப்ரிய:) என்ற பதத்தினுல் சொல்லப் பெற்றிருக்கிறது. 3. பிங்களா என்ற நாடியில் பிராணவாயுவுக்கு ஸஞ்சாரம் ஏற்படும்போது கர்ம நிஷ்டையில் ஜீவனுக்கு ருசியை உண்டுபண்ணி அதன் மூலம் பரம்பரையாக (க்ரமேண) க்ரமமாக ஜீவனுக் கும் தான் பிரத்தியக்ஷமாகி, தன்னேடு அந்த ஜீவனை

ஐக்கியம் செய்துகொள்கிற நிர்குண பரப்ரஹ்மமும் பிங்கள: என்ற சப்தத்திஞல் சொல்லப்பெறும்.

**सर्वतापन:** (ஸர்வதாபந:) = 1. மத்யாஹ்ந ஸமயத்தில் எல்லாரையும் தபிக்கச் செய்கிறவன். அதஞல் ஸர்வதாபந: என்ற பதத்திஞல் ஸூர்ய பகவான் என்று அறிந்துகொள்க. 2. ஒரே காலத்தில் ஸகல அண்டங்களேயும் ஸம்ஹரிக்கிறவன். அதஞல் ஸ்ரீமஹா விஷ்ணு ஸர்வதாபந: என்ற பதத்திஞல் சொல்லப் பெறுகிருர். 3. ஸமஸ்தமான ஜகத்துக்கும் சைதன்யத்தைக் கொடுத்து உஜ்ஜீவிக்கச் செய்கிறவன். **को ह्येवान्यात् कः प्राण्यात् यदेष आकाश आनन्दो न स्यात्** (கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத் யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத்) என்ற ச்ருதியே இதில் பிரமாணமாகும். இதஞல் ஸகல ஜகத்துக்கும் ஜீவாதாதாவான ப்ரஹ்மமே ஸர்வதாபந: என்ற பதத்திஞல் சொல்லப்பெறுகிறது.

**कवि:** (கவி:) = 1. பண்டிதன். வியாகரணம் முதலான ஸகல சாஸ்திரங்களேயும் லோகத்தில் ஸமஸ்தப் பிராணிகளுக்கும் பிரகாசம் செய்துவைக்கிற ஸூர்ய பகவான். 2. **क्रान्तदर्शी** (க்ராந்ததர்சீ) என்றதஞல், சென்றவையான தத்துவங்களே எல்லாம் நன்ருக அறிந்தவன். ஸர்வஜ்ஞன பகவான் என்பது இந்த பதத்திஞல் வெளியாகிறது. 3. **कवयिता इति कवि:** (கவயிதா இதி கவி:) என்பதஞலும், **यस्मिन् ज्ञाते सति सर्वं ज्ञातं भवति** (யஸ்மிந் ஜ்ஞாதே ஸதி ஸர்வம் ஜ்ஞாதம் பவதி) என்ற ச்ருதியிஞலும், தன்னே அறிந்தவனே எல்லாவற்றையும் அறிந்துகொண்ட

வித்வானுகச் செய்துவைக்கும் பரமாத்மாவும் இந்தக் கவி: என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிறது.

विश्वः (விஶ்வ:) = 1. உதய அஸ்தமனங்களினுல் லோக நிர்வாஹத்தைச் செய்துவைப்பதனுல் விஶ்வ: என்ற பதத்தினுல் ஸூர்யன் சொல்லப்பெறுகிருன். 2. विश्वमेवेदं पुरुषं (விஶ்வமேவேதம் புருஷம்) என்ற ச்ருதியினுல், ஜகத்தையே தன் சரீரமாக உடையவனுன விராட்ரூபியான ஸ்ரீமஹாவிஷ்ணு விஶ்வ: என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிருர். 3. தன்ஸ்வரூபத்தை ஜீவன் தெரிந்துகொள்ளாத அவஸ்தையில் தான் மூலாஜ்ஞாநத்தினுல் சபளிதமாக இருந்துகொண்டு, सच त्यचाभवत् (ஸசச் த்யச்சாபவத்), सत्यं च अनृतं च सत्यं अभवत् (ஸத்யம் ச அந்ருதம் ச ஸத்யம் அபவத்) என்ற ச்ருதிகளினுல் ஸகல ஜகதாகாரமாக அஜ்ஞாநிகளுக்குத் தோன்றும் ப்ரஹ்மமே விஶ்வ: என்ற சப்தத்தினுல் சொல்லப்பெறுகிறது.

महातेजाः (மஹாதேஜா:) = 1. அத்யுக்ரமான தேஜஸ்ஸோடு கூடிய ஸூர்யன். 2. महत् निरवधिकं (पराभिभवनसामर्थ्यं) तेजः यस्य सः महातेजाः (மஹத் நிரவதிகம் - பராபிபவந - ஸாமர்த்யம் தேஜ: யஸ்ய ஸ: மஹாதேஜா:) என்ற ஸமாஸத்தினுல், பக்தகோடிகளுடைய பரிபந்திகளை (சத்ருக்களை) நாசம் செய்வதனுல் ஸ்ரீமஹாவிஷ்ணுவே மஹாதேஜா: என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிருர். 3. महत् (மஹத்) தேசத்தாலோ காலத்தாலோ வஸ்துவினுலோ பரிச்சேதம் இல்லாததான तेजः (தேஜ:) தேஜஸ்ஸே, ஒளியே, ஸ்வரூபமோ எவனுக்கு என்ற ஸமாஸத்தினுல்

பரஞ்ஜ்யோதிஸ்ஸாகிய பரப்ரஹ்மமே மஹாதேஜா: என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிறது.

रक्तः (ரக்த:) = 1. ஸர்வ ப்ராணிகளிடத்திலும் அநுக்ரஹத்தோடு (ப்ரியம்) கூடின ஸூர்ய பகவான். 2. ஸர்வ ப்ராணிகளேயும் ஸந்தோஷிக்கும்படி செய்கிற ஸ்ரீமஹாவிஷ்ணு. 3. ஸர்வ பதார்த்தங்களிலும் அநுவ்ருத்தமாக உள்ள சுத்த ப்ரஹ்மமே இந்த ரக்த: என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிறது.

सर्वभवोद्भवः (ஸர்வபவோத்பவ:) = 1. सर्वेषां भवः संसारः उद्भवति यस्मात् इति सर्वभवोद्भवः (ஸர்வேஷாம் பவ: ஸம்ஸார: உத்பவதி யஸ்மாத் இதி ஸர்வபவோத்பவ:) என்ற ஸமாஸத்தினுல், ஸகல ப்ராணிகளுடைய குடும்ப விருத்திக்கு ஹேதுபூதமான ஸூர்ய பகவான். 2. भवतीति भवः कार्यवर्गः (பவதீதி பவ: கார்யவர்க:) என்றதனுல், ஸகல ஜகத்தினுடைய உத்பத்தி ஸ்திதி ப்ரளயங்களுக்குக் காரணபூதமான ஸ்ரீபரமேச்வரன் என்று அர்த்தம். 3. அநுபாஸகர்களான ஸகல ப்ராணிகளுக்கும் ஏற்பட்டிருக்கும் பவம் என்ற ஸம்ஸார பந்தத்தைக் கொடுக்கும் நிர்குண ப்ரஹ்மம் இந்தப் பதத்தினுல் சொல்லப்பெறுகிறது. पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ (பராபித்யாநாத் து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ) என்ற ந்யாயமே இதில் பிரமாணமாகும்.

இந்த ச்லோகத்தில் பத்து நாமாக்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றின் நான்காம் வேற்றுமை உருவங்களை அடியிற்கண்டபடி அறிக:—

| | | |
|---|---|---|
| 1. | आतपिने नमः | ஆதபிநே நம: |
| 2. | मण्डलिने नमः | மண்டலிநே நம: |
| 3. | मृत्यवे नमः | ம்ருத்யவே நம: |
| 4. | पिङ्गलाय नमः | பிங்களாய நம: |
| 5. | सर्वतापनाय नमः | ஸர்வதாபநாய நம: |
| 6. | कवये नमः | கவயே நம: |
| 7. | विश्वस्मै नमः | விஶ்வஸ்மை நம: |
| 8. | महातेजसे नमः | மஹாதேஜஸே நம: |
| 9. | रक्ताय नमः | ரக்தாய நம: |
| 10. | सर्वभवोद्भवाय नमः | ஸர்வபவோத்பவாய நம: |

नक्षत्रग्रहताराणामधिपो विश्वभावनः ।
तेजसामपि तेजस्वी द्वादशात्मन् नमोस्तु ते ॥ १५ ॥

**நக்ஷத்ரக்ரஹதாராணும்**
**அதிபோ விஶ்வபாவந: |**
**தேஜஸாமபி தேஜஸ்வீ |**
**த்வாதஶாத்மந் நமோஸ்து தே ‖ 15 ‖**

**नक्षत्रग्रहताराणां अधिपः** (நக்ஷத்ரக்ரஹதாராணும் அதிப:) 1. அச்வினி முதலான பிரதான நக்ஷத்திரங்கள், நவக்ரஹங்கள், ஸாதாரணமான அபிஜித் முதலான நக்ஷத்திரங்கள்-இவற்றுக்கு யஜமானனுன ஸூர்யபகவான். 2. **यश्चन्द्रतारकं अन्तरो यमयति** (ய: சந்த்ரதாரகம் அந்தரோ யமயதி) என்ற அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்கியத்தை அநுஸரித்து நவக்ரஹங்கள், முக்கியமான நக்ஷத்திரங்கள், கௌணமான நக்ஷத்திரங்கள் எல்லாவற்றுக்கும் அந்தர்யாமியான பகவான் இந்தப் பதத்திஞல் சொல்லப்பெறுகிறது. 3. நக்ஷத்திரங்கள், க்ரஹங்கள் முதலானவற்றுக்கும்

अधि (அதி) என்ற பதத்தினுல் அதிதேவதைகள் எவர்களோ அவர்களையும் ரக்ஷிக்கிற பரமாத்மா நக்ஷத்ர க்ரஹ தாராதிப: என்று சொல்லப்பெறுகிறுர். இதில் ஸமாஸம் **नक्षत्रग्रहताराणां अधीन् पातीति नक्षत्रग्रह-ताराणां अधिपः** (நக்ஷத்ரக்ரஹ-தாராணும் அதீந் பாதீதி நக்ஷத்ரக்ரஹதாராணும் அதிப:).

**विश्वभावनः** (விஶ்வபாவந:) = 1. **विश्वं भावयतीति विश्वभावनः** (விஶ்வம் பாவயதீதி விஶ்வபாவந:) என்றதனுல், தன்னுடைய பிரகாசத்தினுல் ஜகத்தை அலங்கரிக்கச் செய்யும் ஸூர்யபகவான். 2. **विश्वं भावयति स्थापयतीति विश्वभावनः** (விஶ்வம் பாவயதி ஸ்தாபயதீதி விஶ்வபாவந:) என்ற ஸமாஸத்தால், ஜகத்தினுடைய ஸ்திதிக்கு ஹேதுபூதமான பரமாத்மா. 3. **विश्वं भावयति आत्मसत्तया सत्तास्फूर्तिमन्तं करोति** (விஶ்வம் பாவயதி ஆத்ம-ஸத்தயா ஸத்தாஸ்பூர்த்திமந்தம் கரோதி) என்ற ஸமாஸத்தால், நிர்குண ப்ரஹ்மம் ஸகல ஜகத்துக்கும் அதிஷ்டானமாகும் காரணத்தால் தன்னிடத்தில் ஆரோபிதமான பிரபஞ்சத்துக்குத் தன்னுடைய ஸத்தையையும் ஸ்பூர்த்தியையும் ப்ரியதையையும் கொடுத்துப் பிரபஞ்சத்தையும் ஸத்போலும், சித் போலும், ஆனந்தம் போலும் மூடஜனங்களுக்குப் பிரகாசிக்கச் செய்கிற சுத்தப்ரஹ்மமும் விஶ்வபாவந: என்ற பதத்தினுல் சொல்லப்பெறுகிறது.

**तेजसामपि तेजस्वी** (தேஜஸாமபி தேஜஸ்வீ) = 1. அக்கினி முதலான தேஜஸ்ஸுக்களைக் காட்டிலும் மேலான தேஜஸ்ஸோடு கூடிய ஸூர்ய பகவான். 2. **सूर्यस्यापि भवेत् सूर्यः** (ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய:)

என்ற ஸ்ரீமத் ராமாயணத்தில், ஸுமித்ராதேவியின் வாக்கியத்தை அநுஸரித்து ஸூர்ய குலத்தையும் பிரகாசம் செய்து வைக்கிற ப்ரக்ருத ராமா வதாரம் செய்த ஸ்ரீமந்நாராயணன். 3. **येन सूर्यः तपति तेजसेद्धः, न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं, न तद्भासयते सूर्यः, अनुकृतेस्तस्य च** (யேந ஸூர்ய: தபதி தேஜஸேத்த:, ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்; ந தத்பாஸயதே ஸூர்ய:; அநுக்ருதேஸ் தஸ்ய ச) என்ற ச்ருதி ஸ்ம்ருதி ந்யாயங்களால், ஸர்வ ஜகத்தையும் பாஸிக்கச் செய்கிற ஸூர்யாதிகளுக்குக்கூடத் தான் பாஸ்யனாக ஆகாமல் ஸூர்யாதி தேஜோ மண்டலங்களையும் பாஸிக்கச் செய்துகொண்டு தானும் ஸ்வயமாக பாஸித்து வரும் ஸ்வயம்ப்ரகாச சிதேகரஸமான நிர்குண பரப்ரஹ்மமே தேஜஸாமபி தேஜஸ்வீ என்று சொல்லப்பெறுகிறது.

**द्वादशात्मन्** (த்வாதஶாத்மந்)=(1) **द्वादश आत्मानः मूर्तयः यस्य सः द्वादशात्मा, तस्य संबोधनं हे द्वादशात्मन्** (த்வாதஶ ஆத்மாந: மூர்த்தய: யஸ்ய ஸ: த்வாதஶாத்மா, தஸ்ய ஸம்போதநம் ஹே த்வாதஶாத்மந்) என்ற ஸமாஸத்தால், பன்னிரண்டு மாதங்களுக்கும் பன்னிரண்டு விதமான மூர்த்திகளோடு கூடின ஹே ஸூர்ய பகவானே என்பது அதன் பொருளாகும். அந்தப் பன்னிரண்டு விதமான மூர்த்திகள், மாதக் கிரமமாக இவர்களாவர்—

| | | | |
|---|---|---|---|
| 1. | इन्द्रः | இந்த்ர: | சித்திரை |
| 2. | धाता | தாதா | வைகாசி |
| 3. | भगः | பக: | ஆனி |
| 4. | पूषा | பூஷா | ஆடி |
| 5. | मित्रः | மித்ர: | ஆவணி |

| | | | |
|---|---|---|---|
| 6. | वरुणः | வருண: | புரட்டாசி |
| 7. | अर्यमा | அர்யமா | ஐப்பசி |
| 8. | अर्चिः | அர்ச்சி: | கார்த்திகை |
| 9. | विवस्वान् | விவஸ்வாங் | மார்கழி |
| 10. | त्वष्टा | த்வஷ்டா | தை |
| 11. | सविता | ஸவிதா | மாசி |
| 12. | विष्णुः | விஷ்ணு: | பங்குனி |

| | | |
|---|---|---|
| 1. | इन्द्राय नमः | இந்த்ராய நம: |
| 2. | धात्रे नमः | தாத்ரே நம: |
| 3. | भगाय नमः | பகாய நம: |
| 4. | पूष्णे नमः | பூஷ்ணே நம: |
| 5. | मित्राय नमः | மித்ராய நம: |
| 6. | वरुणाय नमः | வருணாய நம: |
| 7. | अर्यम्णे नमः | அர்யம்ணே நம: |
| 8. | अर्चिषे नमः | அர்ச்சிஷே நம: |
| 9. | विवस्वते नमः | விவஸ்வதே நம: |
| 10. | त्वष्ट्रे नमः | த்வஷ்ட்ரே நம: |
| 11, | सवित्रे नमः | ஸவித்ரே நம: |
| 12. | विष्णवे नमः | விஷ்ணவே நம: |

இதற்கு, "इन्द्रो धाता भगः पूषा मित्रोऽथ वरुणोऽर्यमा। अर्चिर्विवस्वान् त्वष्टा च सविता विष्णुरेव च॥" (இந்த்ரோ தாதா பக: பூஷா மித்ரோத வருணோர்யமா | அர்ச்சிர் விவஸ்வாங் த்வஷ்டா ச ஸவிதா விஷ்ணுரேவ ச ॥) என்ற விஷ்ணுபுராண வாக்கியமே பிரமாணமாகும்.

2. பன்னிரண்டு விதமான மண்டலங்களுக்குள் பாஸிக்கும் ஹே பரமசிவனே.

| | | |
|---|---|---|
| 1. | सूर्यमण्डलम् | ஸூர்ய மண்டலம் |
| 2. | चन्द्रमण्डलम् | சந்த்ர மண்டலம் |

| | | |
|---|---|---|
| 3. | अग्निमण्डलम् | அக்கினி மண்டலம் |
| 4. | विद्युन्मण्डलम् | வித்யுந் மண்டலம் |
| 5. | नक्षत्रमण्डलम् | நக்ஷத்திர மண்டலம் |
| 6. | चक्षुर्मण्डलम् | சக்ஷுர் மண்டலம் |
| 7. | हृदयमण्डलम् | ஹ்ருதய மண்டலம் |
| 8. | वेदमण्डलम् | வேத மண்டலம் |
| 9. | देवमण्डलम् | தேவ மண்டலம் |
| 10. | ब्रह्मनिष्ठमण्डलम् | ப்ரஹ்மநிஷ்ட மண்டலம் |
| 11. | उदकमण्डलम् | உதக மண்டலம் |
| 12. | आकाशमण्डलम् | ஆகாச மண்டலம் |

3. द्वादशस्थाने आत्मा स्वरूपं उपलभ्यते यस्य सः द्वादशात्मा, तस्य संबोधनं द्वादशात्मन् (த்வாதஶஸ்தாநே ஆத்மா ஸ்வரூபம் உபலப்யதே யஸ்ய ஸ: த்வாதஶாத்மா, தஸ்ய ஸம்போதநம் த்வாதஶாத்மந்) என்ற ஸமாஸத்தினுல், சரீரத்தில் பன்னிரண்டு ஸ்தானங்களில் எந்தப் பரமாத்மாவின் ஸமாதி காலத்தில், ஸாக்ஷாத்காரம் ஏற்படுமோ அந்தப் பரமாத்மாவுக்கு த்வாதஶாத்மா என்று பெயர்.

அவ்விதமான பன்னிரண்டு ஸ்தானங்களாவன, ப்ரஹ்ம நாடி என்ற ஸுஷும்நா நாடிக்குள்:

| | | |
|---|---|---|
| 1. | मूलाधारचक्रम् | மூலாதார சக்ரம் |
| 2. | मणिपूरकचक्रम् | மணிபூரக சக்ரம் |
| 3. | स्वाधिष्ठानचक्रम् | ஸ்வதிஷ்டாந சக்ரம் |
| 4. | अनाहतचक्रम् | அநாஹத சக்ரம் |
| 5. | विशुद्धिचक्रम | விசுத்தி சக்ரம் |
| 6. | आज्ञाचक्रम् | ஆஜ்ஞா சக்ரம் |
| 7. | कैलासचक्रम् | கைலாஸ சக்ரம் |
| 8. | बोधिनीचक्रम | போதிநீ சக்ரம் |

| | | |
|---|---|---|
| 9. | सूर्यखण्डचक्रम् | ஸூர்யகண்ட சக்ரம் |
| 10. | अग्निखण्डचक्रम् | அக்நிகண்ட சக்ரம் |
| 11. | चन्द्रखण्डचक्रम् | சந்த்ரகண்ட சக்ரம் |
| 12. | ब्रह्मरन्ध्रचक्रम् | ப்ரஹ்மரந்த்ர சக்ரம் |

மேற்சொன்ன பன்னிரண்டு ஸ்தானங்களிலும் பரமாத்மாவை யோகிகள் ஸமாதியில் ஸாக்ஷாத்கரித்துக் கொள்ளுவதனுல் அந்த பரமாத்மா தான் த்வாதஶாத்மந் என்று கூப்பிடப்படுகிருர்.

**ते** (தே) = 1. பன்னிரண்டு மாதங்களிலும் பன்னிரண்டு ஸ்வருபத்தோடு கூடிய உனக்கு, 2. பன்னிரண்டு மண்டலங்களிலும் பாஸிக்கிற உனக்கு, 3. சரீரத்தில் பன்னிரண்டு ஸ்தானங்களிலும் ஸாக்ஷாத்கரிக்கப்பெறுகிற உனக்கு,

**नमः** (நம:) = காயிக, வாசிக, மாநஸிக நமஸ்காரம்.

**अस्तु** (அஸ்து) = 1. இருக்கட்டும். 2. வணக்கம் (உபாஸகத்வம், பாரதந்த்ரியம்) எப்போதும் இருக்கட்டும் அதாவது எப்போதும் நான் உன்னை உபாஸிக்கிறேன். 3. நம: என்றதனுல் **मे** (மே) எனக்கு உன்னைக் காட்டிலும் அணுமாத்திரமான பேதங்கூட **न** (ந) இல்லை என்றதனுல், நீயே நான், நானே நீ என்று எப்போதும் அநுஸந்தானம் செய்து கொண்டே இருக்கிறேன்.

மேற்கண்ட ச்லோகத்தில் நான்கு நாமாக்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றின் நான்காம் வேற்றுமை உருவங்களாவன—

1. **नक्षत्रग्रहताराणां अधिपाय नमः**

நக்ஷத்ரக்ரஹதாராணும் அதிபாய நம:

2. विश्वभावनाय नमः விஶ்வபாவநாய நம:
3. तेजसामपि तेजस्विने नमः
தேஜஸாமபி தேஜஸ்விநே நம:
4. द्वादशात्मने नमः த்வாதஶாத்மநே நம:.

नमः पूर्वाय गिरये पश्चिमायाद्रये नमः ।
ज्योतिर्गणानां पतये दिनाधिपतये नमः ॥ १६ ॥

**நம: பூர்வாய கிரயே பஶ்சிமாயாத்ரயே நம: ।**
**ஜ்யோதிர்கணாநாம் பதயே திநாதிபதயே நம: ॥ 16 ॥**

पूर्वाय गिरये (பூர்வாய கிரயே) = 1. கிழக்குப் பாகத்திலுள்ள கிரியில் (பர்வதத்தில்) உதயமாகும் ஸூர்யனைக் குறித்து, 2. கிழக்குப் பாகத்திலுள்ள உதயகிரிக்கும் அந்தர்யாமியான மஹாவிஷ்ணுவின் பொருட்டு. 3. மலையைப் போல் அப்ரகம்ப்யமான (அசைக்க முடியாததான) பூர்வ கண்டமாகிய வேதத்தில் தர்ம மூர்த்தியாக விளங்கும் அந்தராத்மாவின் பொருட்டு,

नमः (நம;) = நமஸ்காரம்.

पश्चिमायाद्रये (பஶ்சிமாயாத்ரயே) =1. மேற்குத் திக்கிலுள்ள அஸ்தமய பர்வதத்தில் அஸ்தமனமாகும் ஸூர்யனைக் குறித்து, 2. மேற்குத் திக்கிலுள்ள அஸ்தமய பர்வதத்துக்கும் அந்தர்யாமியான ஸ்ரீமஹா விஷ்ணுவின் பொருட்டு, 3. மலையைப் போல் அசைக்க முடியாததான ஞானகாண்டமாகிய வேதத்தில் பரப்ரஹ்ம மூர்த்தியாக விளங்கிவரும் அந்தராத்மாவைக் குறித்து,

नमः (நம:) நமஸ்காரம்.

ज्योतिर्गणानां पतये (ஜ்யோதிர்கணாநாம் பதயே) 1. நக்ஷத்திரங்கள் முதலான ஜ்யோதிஸ்ஸுக்களின் கூட்டத்துக்கு ஸ்வாமியான ஸூர்யபகவானின் பொருட்டு, 2. ஜ்யோதிஸ்ஸைப் போல் பிரகாசித்துக் கொண்டிருக்கும் முக்த புருஷர்களின் கூட்டத்துக்கு ஸ்வாமியான ஸ்ரீமந்நாராயணனின் பொருட்டு, 3. ஞானரச்மிகளுக்கு ஸ்வாமியான ஸாக்ஷி சைதன்யத்தின் பொருட்டு,

नमः (நம:) நமஸ்காரம்.

दिनाधिपतये (தினாதிபதயே)=1. பகலுக்கு அதிபதியான ஸூர்யனின் பொருட்டு, 2. பகலுக்கு அதிபதியான ஸூர்ய பகவானுக்கும் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீமந்நாராயணனின் பொருட்டு, 3. பகலுக்கு அதிபதியான ஸூர்ய பகவானுக்கும் பிரகாசத்தைக் கொடுக்கும் பரஞ்ஜ்யோதி ஸ்வரூபமான ப்ரஹ்மத்தின் பொருட்டு,

नमः (நம:)=நமஸ்காரம்.

இந்தச்லோகத்திலுள்ள நான்கு நாமாக்களுக்கும் அடியிற் கண்டபடி நான்காம் வேற்றுமை உருவங்களை அறிக—

1. पूर्वाय गिरये नमः பூர்வாய கிரயே நம:
2. पश्चिमायाद्रये नमः பஶ்சிமாயாத்ரயே நம:
3. ज्योतिर्गणानां पतये नमः ஜ்யோதிர்கணாநாம் பதயே நம:
4. दिनाधिपतये नमः தினாதிபதயே நம:.

जयाय जयभद्राय हर्यश्वाय नमो नमः ।
नमो नमः सहस्रांशो आदित्याय नमो नमः ॥ १७ ॥

ஜயாய ஜயபத்ராய ஹர்யஶ்வாய நமோ நம: |
நமோ நம: ஸஹஸ்ராம்ஶோ ஆதித்யாய நமோ நம: ‖ 17 ‖

जयाय (ஜயாய)=1. जयतीति जयः (ஜயதீதி ஜய:) என்ற ஸமாஸத்தால், நிகரற்ற பராக்கிரமத்தோடு கூடிய ஸூர்ய பகவானின் பொருட்டு, 2. ஜயன் என்ற பெயருடைய ஒரு த்வாரபாலகனையுடைய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பொருட்டு, 3. जयन्ति अनेन संसारं विद्वांसः (ஜயந்தி அநேந ஸம்ஸாரம் வித்வாம்ஸ:) என்ற ஸமாஸத்தால், தன் தத்துவத்தை அறிந்துகொண்ட ஞானிகளுக்கு ஏற்பட்டிருக்கும் ஸம்ஸார பந்தத்தை நிவ்ருத்தி செய்து வைக்கிற நிர்குண ப்ரஹ்மத்தின் பொருட்டு,

नमः (நம:)=நமஸ்காரம்.

जयभद्राय (ஜயபத்ராய)=1. சத்துரு ஜயம், கல்யாணம் ஆகிய இரண்டையும் உபாஸகர்களுக்குக் கொடுக்கிற ஸூர்ய பகவானின் பொருட்டு, 2. ஜய பத்ரன் என்ற இரண்டாவது துவாரபாலகனுடன் கூடிய ஸ்ரீமந்நாராயணனின் பொருட்டு, 3. மாநுஷாநந்தம் முதல் ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள ஸகல விதமான லோக போகங்களையும் ஜயித்ததனுல் அடையத் தகுந்த யாதொரு பத்ரம் உண்டோ (அதாவது பூமாநந்தம்) அதையே ஸ்வரூபமாக உடைய பரப்ரஹ்மத்தின் பொருட்டு,

नमः (நம:)=நமஸ்காரம்.

**हर्यश्वाय** (ஹர்யஶ்வாய) 1. பச்சைக் குதிரைகளோடு கூடிய ஸூர்யனின் பொருட்டு, 2. **हरिः हनूमान् अश्वः वाहनं यस्य सः हर्यश्वः** (ஹரி: ஹநுமாந் அஶ்வ: வாஹநம் யஸ்ய ஸ: ஹர்யஶ்வ:) என்ற ஸமாஸத்தால், ஆஞ்சநேய ஸ்வாமியை வாகனமாக அடைந்த ஸ்ரீராமாவதாரம் செய்த மஹாவிஷ்ணுவின் பொருட்டு, 3. **इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः** (இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:) என்ற கீதா வாக்கியத்தினுல், **हरन्तीति हरयः इन्द्रियाणि** (ஹரந்தீதி ஹரய: இந்த்ரியாணி) அந்த இந்த்ரியங்களையே வாகனமாக உடைய அந்தராத்மாவின் பொருட்டு,

**नमो नमः** (நமோ நம:)=நமஸ்காரம, நமஸ்காரம்.

**सहस्रांशो** (ஸஹஸ்ராம்ஶோ) =1. ஆயிரக்கணக்கான கிரணங்களோடு கூடிய ஸூர்யனே, 2. ஆயிரக்கணக்கான அந்தரங்க பக்தகோடிகளுடைய ஸமூஹத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கிற பிரபுவான ஸ்ரீமந் நாராயணனே, 3. **ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः** (மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:) என்ற கீதா வாக்கியத்தை அநுஸரித்து, அநேக ஜீவகோடிகளைத் தன் அம்சங்களாக உடைய பரப்ரஹ்மமே,

**नमो नमः** (நமோ நம:)=நமஸ்காரம் நமஸ்காரம்.

**आदित्याय** (ஆதித்யாய) = 1. அதிதி தேவியின் குமாரனுக அவதரித்த ஸூர்யனின் பொருட்டு, 2. ஸூர்ய மண்டலத்தின் நடுவில் பிரகாசித்துக் கொண்டிருக்கிற மஹாவிஷ்ணுவின் பொருட்டு, 3. **न दितिः अदितिः** (ந திதி: அதிதி:) என்றதனுல்,

பரம சுத்தமான ப்ரஹ்ம வித்யையாலே அடையத் தகுந்த பரப்ரஹ்மத்தின் பொருட்டு,

नमो नमः (நமோ நம:) = நமஸ்காரம், நமஸ்காரம். இந்த ச்லோகத்திலுள்ள நாமாக்களாவன—

1. जयाय नमः ஜயாய நம:.
2. जयभद्राया ஜயபத்ராய நம:.
3. हर्यश्वाय नमः ஹர்யஸ்வாய நம:.
4. सहस्रांशवे नमः ஸஹஸ்ராம்ஶவே நம:.
5. आदित्याय नमः ஆதித்யாய நம:.

नम उग्राय वीराय सारंगाय नमो नमः ।
नमः पद्मप्रबोधाय प्रचण्डाय नमोऽस्तु ते ॥ १८ ॥

**நம உக்ராய வீராய ஸாரங்காய நமோ நம: ।**
**நம: பத்மப்ரபோதாய ப்ரசண்டாய நமோஸ்து தே ॥ 18 ॥**

उग्राय (உக்ராய) = 1. உபாஸிக்காதவர்களைத் தன் உக்கிரமான கிரணங்களால் தபிக்கச்செய்யும் ஸூர்ய பகவானின் பொருட்டு, 2. ஸூர்ய மண்டலத்தின் நடுவில் ருத்திரனுடைய ரூபமாகப் பிரகாசித்து வரும் பரமேச்வரனின் பொருட்டு, 3. மிகவும் கடினமான (துர்லபமான) இந்த்ரிய நிக்ரஹம் என்ற உபாயத்தினால் அடையத் தகுந்த ப்ரஹ்மத்தின் பொருட்டு,

नमः (நம:) = நமஸ்காரம்.

वीराय (வீராய) = 1. विविधं ईरयति प्रेरयति प्राणिनः चेष्टयतीति वीरः (விவிதம் ஈரயதி ப்ரேரயதி ப்ராணிந: சேஷ்டயதீதி வீர:) என்ற ஸமாஸத்தால், 'ஸூர்யன் உதித்துவிட்டானே' என்று பரபரப்புடன் ஸமஸ்த ப்ராணிகளையும் உதயமானவுடன் எல்லாக் காரியங்

